# 61. கனவுகள்

எங்கிருந்தோ வந்தது. அதன் வால் எங்கிருக்கிறது என்று தெரியவில்லை-தலைமட்டும்தான் என்னை எட்டியிருக்கிறது... தலை என்றா சொன்னேன்? இல்லை இல்லை வால்தான் என்னை எட்டியிருக்கிறது. தலையாக இருந்தால் அது வாயைப் பிளந்து படம் எடுத்து விஷப் பல்லால் என்னைத் தீண்டியிராதோ? வால்தான் என்னை எட்டியிருக்கிறது. தலை எங்கேயோ கிடக்கிறது. கண்ணைக் குவித்துக் கொண்டு பார்க்க முயலுகிறேன். கண்ணுக்கு எட்டிய அளவில் தலை தெரியவில்லை. தங்கச் செதில்களாகப் பாம்பின் உடல் கவசங்களும் வளைந்து நேராகி வளையும் மூங்கில் பளபளப்புடன் பாம்பின் உடலும் கண்ணுக்கெட்டிய அளவில் தெரிகிறது. வாலால் தொட்ட பாம்பு என்னை வாயாலும் தொடும்-விஷப் பல்லாலும் தீண்டும். எப்போது? அதுதேடி என்னைக் காண வேண்டும். குருட்டுப் பக்கம் மாறி கண்பக்கம் என்னைத் திருப்பி (திரும்பிப்) பார்த்து... அல்லது வாலைச் சுற்றிச் சுற்றி என்னைப் பிணைத்து வாயை அருகில் இழுத்துக் கொள்ளுமோ-அத்தனை பிணைப்புகளுக்கு என் ஐந்தடி ஐந்தரை அங்குல உயர மூணடிக் கனத்தில் இடம் இராது. என்ன செய்யுமோ? ஏக்கத்துடன் காத்திருக்கிறேன். ஓடி விடலாம் என்று எண்ணி நகர்ந்தாலோ, அந்த வால் பசைவைத்து ஒட்டினாற்போல ஒட்டிக்கொண்டே என்னைத் தொடர்ந்து வருகிறது, இதுவே பாரம்பரியம், மரபு, காலம்-காலபாசம், நானும் என் முன்னோர்களும். அந்த வால் நுனிதான் என் தகப்பனார். முகமே அதோ அதிலே தெரிகிறதே. அதற்கடுத்து இதுவரை நான் உயிருடன் பார்த்திராத என் தாத்தா-அவர் முகத்தைக் கண்டு கொண்டேன் இன்று. அதற்குமுன் அவர் அம்மா. அவர் அப்பா... ஆனால் அப்பா என்று தொடங்குவதை விட அம்மா, அவள் அம்மா, அவள் அப்பா என்று போவது பொருந்தும் என்று எனக்குள் ஏதோ சொல்லுகிறது. அந்தக் கால ஸர்ப்பத்தின் தலைதான் உலகில் ஆதி மனிதனோ- அம்மாவானால் ஏவாளோ? டெலிபோன் நம்பர் 0001.

★ ★ ★

ஐவராகச் சேர்ந்து என்னைப் பிணைக்கிறார்கள். "ஐயோ ஐயோ என் சுதந்திரம், என் சுதந்திரம்" என்று நான் கூவாமல் கூவுகிறேன். "சுதந்திரம் தானே வேணும் உனக்கு. இந்தா சுதந்திரம்" என்று மூட்டை ஒன்றைக் கட்டிக் கொணர்ந்து என்னிடம் தருகிறான் ஐந்தாவது ஆசாமி. தூக்கமாட்டாமல் தூக்கிக் கொண்டு நால்வரும் என்னை உதறிவிட எங்கேயோ எட்டிப் போய் விழுகிறேன், என் சுதந்திர மூட்டை பிரிந்து அவிழ்ந்து என்மேலேயே விழுந்து விட்டது. மறுவிநாடி காணவேயில்லை.... சுற்றுமுற்றும் பார்க்கிறேன். வானத்திலே கொளுத்தும் சூரியனையும் தரையில் புல் பூண்டு கருகிய கோடையும் தவிர வேறு எதுவும் காணவில்லை... தெற்கு நோக்கி நடக்கிறேன். எட்டு நாள் நடக்கிறேன். போக்குப் போக்கென்று போயும் ஒன்றும் தென்படவில்லை-ஒரு மனிதனையோ உயிருள்ள ஜந்துவையோ காணவில்லை. திரும்பும் கால் இந்த எட்டு நாள் தொலைவும் அரை நாளில் கடந்து விடுகிறேன். என் கால்கள் ஹெலிகாப்டர்களாக மாறிவிட்டன; பழைய நடு மையத்துக்கு வந்தவுடன் ஹெலிகாப்டர்கள் மறைந்து விடுகின்றன. மேற்கு நோக்கிப் பத்து நாள் நடக்கிறேன். அங்கும் எதையும் யாரையும் காணவில்லை. தூரத்தில் ஏதோ ஒரு கண்ணாடிச் சுவர் தெரிவது போல லேசாகத் தெரிகிறது. சூரிய ஒளியில் அது மின்னுகிறது என்பதைத் தவிர இன்னும் இரண்டு நாள் நடந்தும் அதைத் தொட இயலவில்லை... அப்பால் போய் விடுகிறது. திரும்ப நினைக்கும்போது கால்கள் ஹெலிகாப்டர்களாக மாறிவிடுகின்றன. ஆனால் இந்த ஹெலிகாப்டர்கள் நான் விரும்புகிற பக்கம் திரும்ப மறுக்கின்றன. மேற்கு கோடியிலிருந்து கிழக்கே பன்னிரண்டு நாள் தொலைவையும் அரைநாளில் கடந்து மறுபடியும் அந்த நடுமத்திக்குக் கொணர்ந்து சேர்க்கின்றன... ஆமாம். அதுதான் நடுமத்தி என்று எதைவைத்துச் சொல்கிறேன்? அதை அடையாளம் கண்டு கொள்ள. அங்கே என்ன இருக்கிறது? மரமா, கட்டிடமா, மனிதனா?.... அதுதான் நடுமத்தி என் சுதந்திர மூட்டையை இழந்த இடம் என்று எனக்குள் ஏதோ ஒன்று சொல்கிறது. அடுத்து நான் வடக்கேயோ கிழக்கேயோ செல்ல வில்லை. அங்கும் என்ன இருக்கிறது என்று எனக்குத் தெரியும் வீணாக அலைவானேன். பத்மாஸனம் போட்டுத் தவத்தில் ஆழ்ந்து விடுகிறேன். துருவன் ஆகிவிடுகிறேன் வசிஷ்டர் ஜனகாதி முனிவர்கள் எல்லாம் ஆகிவிடுகிறேன். பிட்சாடனர் வரவேண்டும்- ஆனால் தாருகாவனத்தில் முனிவர்களின் மனைவிகள் இல்லாத வரையில் எதற்காகப் பிட்சாடனர் வரப்போகிறார்? அல்லது நானேதான் முனிவர்களும் முனிவர்களின் மனைவிகளுமா?... இது

சின்னப் பிரச்சனை. பெரியப் பிரச்னை என் சுதந்திரம் எங்கே என்பதுதான். அதைக்குறித்தே நான் தவமிருக்கிறேன்.- தவம் இருந்தேன். கல்பகோடி காலம் தவமிருந்தேன். ஹரியும் வரவில்லை. காளி மாசக்தியும் வரவில்லை... பரமசிவனும் வரவில்லை. சிறிது சிறிதாக என் கோர தவத்தினால் என் சுதந்திர மூட்டை... பழைய மூட்டையேதான் உருப்பெற்றது. அந்த மூட்டைக்குள் ஒன்றுமில்லை என்பது எனக்குத் தெரியாதா? ஆனால் அது என் மூட்டை என்பது எனக்குத் திருப்தி தந்தது. என் மூட்டையை என் தலைமேல் தூக்கி வைத்துக் கொண்டு அதன் ஒன்றுமில்லாத கனத்தில் அழுந்தியவனாக என் தவத்தை முடித்துக் கொண்டேன். இனித் தவத்துக்கு என்ன அவசியம்-' மூட்டைதான் கிடைத்துவிட்டதே.

★ ★ ★

முகர்ந்து முகர்ந்து பார்க்கிறேன்... எழுத்து வாசனை தெரிய வில்லை... மூக்குத்தான் தேய்கிறது. வாசனை புலனாகவில்லை... கம்பனுக்கு எழுதப் படிக்கத் தெரியுமோ? பாட்டுச் சொல்லத் தெரியும். கற்றுச் சொல்லி எழுதிக் கொள்வான். எழுதவோ எழுதுவதைப் படிக்கவோ வராது-என் எழுத்துப் போல. பிளாஞ் செட்டில் அன்றொரு நாள் எல்லோரையும் கூப்பிட்டுக் கேட்டுவிட்டுச் சென்றுவிட்டேன். உலகத்துக் கவிகள் எல்லாமே பள்ளிக்கூடம் போய் முறையாகக் கற்றதில்லை. புளியங்காய் எண்ணுகிற ஒரு உத்தியோகத்துக்கும் லாயக்கற்றவர்கள்... கல்வி அதிகாரி ஒருவர் தன் எதிரில் பெரிய பேப்பர் ஒன்றைப் பிரித்து வைத்துக் கொண்டு அதில் சிவப்பு மசியால் ஆயிரக்கணக்கான X குறிகள் போட்டுக் கொண்டிருக்கிறார். எதிரில் நிற்கிற கூட்டத்திலே அவர் ஒரு X குறிபோட்டு விட்ட உடனே ஒரு உருவம் மறைந்து விடுகிறது... இப்படி இப்படியாக இல்லாமல் ஆக்கும் கலை இவர் கையில் வளர்ந்திருக்கிறது என்று நான் யோசித்துக் கொண்டே நிற்கும் போது யாரோ எங்கேயோ சிவப்பு மசியால் ஒரு X குறி போட்டதன் காரணமாக அந்த அதிகாரியும் அவர் கைக்காகிதமும் ஒரு விநாடியில் மறைந்து விட்டன. தேடிக் கொண்டிருக்கிறேன். மீண்டும் கண்டு விடுவேன்-கவலை வேண்டாம்.

●

இலக்கிய வட்டம்
22.5.64